[7th February 1959

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : மீன் வளர்ச்சியை, மீன்வளத்தை பெருக்க என்னென்ன நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமோ அந்தந்த நடவடிக்கைகளெல்லாம் எடுக்கப்பட்டு வருகிறது. அது மட்டுமல்ல. இப்போது மீனை அதிகப்படுத்துவதில் சர்க்கார் முயற்சி எடுப்பதிலும், இருக்கும் மீன் குஞ்சுகளை வைத்துக்கொண்டு தான் பெருக்க முடியுமே தவிர, எல்லாக் குளங்களிலும், குட்டைகளிலும் வளர்ப்பது என்பது சாத்தியமானதல்ல.

SRI K. B. S. MANI : தலைவர் அவர்களே, இப்போது கொடுக்கப்பட்டுள்ள அறிக்கையிலே பல வகை மீன்களின் பெயர்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவைகளுள் எந்த மீன் மிகவும் ருசியானது ? அது சென்னை மார்க்கெட்டிலே கிடைக்குமா ? (சிரிப்பு.)

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : கனம் அங்கத்தினர் அவர்கள் சாப்பிட்டுப் பார்த்தால் தெரியும் (சிரிப்பு.)

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : மீன் உணவுவகைகளில் மிகச் சிறந்த உணவாக இருப்பதால், கிராமங்களில் சொந்த கிணறுகளில் இதை விஸ்தரிக்க ஏது இருப்பதால் சொந்தக் கிணறுகளில் விஸ்தரிக்க நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : தனிப்பட்டவர்கள் அபிவிருத்தி செய்ய முன் வந்தால் இப்போதும் உதவி கொடுக்கப்பட்டு வருகின்றது.

SRI A. VEDARATHNAM : இப்போது கொடுக்கப்பட்டுள்ள ஜாபிதாவில் "பால் மீன்" என்ற ஒரு வகை குறிப்பிடப்பட்டிருக்குகிறது. அந்தப் பெயருக்கும் பாலுக்கும் ஏதாவது சம்பந்தமுண்டா ? (சிரிப்பு.)

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : பெயரைப் பொருத்து எல்லாம் இருக்க முடியாது. பெயர்கள் பலவிதப்படும். மீன்கள் பல விதப்படும். ஆகையால் பாலுக்கும் இந்த மீனுக்கும் பொருத்தம் இருக்கிறது என்று நினைப்பது சரியல்ல. அது ஒரு வகை மீன், அவ்வளவுதான்.

*Grama Sevak Training Centre, Kovilpatti*

* 87 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether the Government have received any representation from the Gramasevak trainees of the Training Centre at Kovilpatti;

(*b*) if so, what their request is; and

(*c*) what action has been taken on it?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) Some of the Gramasevak trainees at the Rural Extension Training Centre, Kovilpatti, requested that the orders extending the period of training from 18 months to two years should not be enforced on them and that they should be allowed to complete the training in 18 months. Some of the trainees recruited direct through the Madras Public Service Commission had also made a request that they should be granted the pay and allowances admissible to Gramasevaks, Grade II, as allowed in the case of candidates recruited as political sufferers.

(*c*) The requests were negatived by the Government.

7th February 1959]

SRI K. SATTANATHA KARAYALAR : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இப்போது மத்திய சர்க்காருடைய உத்திரவுப் பிரகாரம் அவர்களுக்கும் சமமான கிராண்ட் கொடுப்பதாகத் தெரிவிக்கப்பட்டது. இப்போது எவ்வளவு கொடுக்கப்படுகிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : மாதம் ஒன்றுக்கு 40 ரூபாய் என்று நினைக்கிறேன். நேற்று அதைப் பற்றிக் குறிபிட்டிருக்கிறேன்.

*Unhealthy localities*

* 88 *Q.*—SRI M. K. SOMASUNDARAM (on behalf of Sri T. Thirumaimuthu Veerasakkaya Thiruvenkadasami Naicker) : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Government have declared some of the towns in the State as " unhealthy places ";

(*b*) if so, the names of those towns; and

(*c*) the reasons for declaring them as " unhealthy places "?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) The Government have not declared any town in the State as " unhealthy locality " but the following *areas* in the Madras State have been declared as " unhealthy localities ".

(*b*) (1) Kollimalais.

(2) Bolampatti Reserves in the Coimbatore district.

(3) The Palamalai Hills in the North Coimbatore Forest Division.

(4) Anaikatti North and South Reserve Forest in the Coimbatore district.

(5) Pillur Gaithaikadu and Gopinari villages in the North Coimbatore Forest Division.

(6) Nellithorai in the Coimbatore district.

(*c*) There is risk of malaria and filaria in these localities.

SRI A. A. RASHEED : Sir, may I know from the Hon. Minister whether these localities have become healthy now?

THE HON. SRI C. SUBRAMANIAM : Not yet, Sir. But, as my Colleague, the Health Minister suggests, they are all becoming healthy.

SRI K. ANBAZHAGAN : துணைத் தலைவர் அவர்களே, சுகாதார நலமற்ற அந்தப் பகுதிகளை சுகாதார நலமுள்ளதாக்க திட்டம் ஏதேனும் உண்டா ? அவைகளை நிறைவேற்ற அரசாங்கம் என்ன நடவடிக்கைகள் எடுத்து வருகின்றது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : மலேரியா, பைலேரியா இவைகளை நீக்க இணைக்கப்பட்ட திட்டம் ஒன்று இப்போதும் நடைபெற்று வருகின்றது. அதை இன்னும் விரிவாக்க சர்க்கார் ஆலோசித்து வருகிறது.

SRI N. MARUDACHALAM : கோயம்புத்தூர் ஜில்லாவில் உள்ள போதனூரில் தோல் சாலையிலிருந்து தண்ணீர் வந்து ஹரிஜனங்களுக்கு மத்தியில் நிற்பதால் அவர்கள் மிகவும் அவதிப்படுகிறார்கள். இது சுகாதாரத்திற்கு விரோதமாக இருக்கிறது என்று ரிப்போர்ட் வந்திருக்கிறதா ? அதன் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப் பட்டிருக்கிறது ?